என்பதை எழுதினால் அதுபற்றி கவனிக்கலாம். ஆனால் எல்லா இடங்களிலும் இம்மாதிரி 8, 10 வீடுகள் கட்டுவதற்கு அனுமதிக்க முடியாது என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

SRI M. P. PERIASAMI : இந்த வீடு கட்டிக் கொடுக்கும் திட்டத்தில் பணமும் செலவாகிறது, கஷ்டங்களும் இருக்கின்றன. ஆனால், இப்பொழுது, ஒவ்வொரு ஜில்லாவிலும், ஹரிஜனங்கள் சொந்த வீடில்லாமல் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, வீட்டுக்கு வேண்டிய நிலங்களை ஜாரி செய்து கொடுக்க சர்க்கார் முன்வருமா ? அப்படிச் செய்வதனால், ஹரிஜன மக்கள் வீடில்லாமல் படும் அதிகக் கஷ்டம் நிவர்த்தியாகும் என்பதை சர்க்கார் உணருகிறதா ?

THE HON. SRI P. KAKKAN : ரூபாய் 8 லட்சத்திற்கு அதிகமாகவே மனைக்கட்டுகள் ஆர்ஜிதம் செய்வதில் சர்க்கார் செலவு செய்து இருக்கிறது. வீடு கட்டிக் கொடுப்பது போலவே, இதிலேயும் சர்க்கார் அக்கரை எடுக்கும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

*Highly-paid officers.*

* 449 Q.—SRI K. RAMACHANDRAN (on behalf of Sri K. Sattanatha Karayalar) : Will the Hon. the Chief Minister be pleased to state the number of officers who draw a salary of Rs. 2,000 (two thousand) and above per mensem?

THE HON. SRI C. SUBRAMANIAM : 40 (Forty).

*Harijan students*

* 450 Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லா, தாளவாடி மலைப்பிரதேசத்திலேயிருக்கும் ஜில்லா போர்டு ஆரம்பப் பாடசாலைகளிலே எத்தனை ஹரிஜன மாணவர்களும், மாணவிகளும், 1958-ம் வருஷத்தில் படித்துக்கொண்டிருக்கிறார்கள் ?

(ஆ) எந்தெந்த பாடசாலைகளிலே படித்துக்கொண்டிருக்கும் ஹரிஜனக்குழந்தைகளுக்கு நண்பகல் உணவு அளிக்கப்பட்டு வருகின்றது ?

(இ) 1957–58-ம் ஆண்டில் இதற்காகச் செலவிடப்பட்ட தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) 110 boys, 42 girls.

(b) No mid-day meals are supplied in any of the district board schools.

(c) Nil.

SRI P. G. MANICKAM : மேற்கண்ட ஜில்லா போர்டு பள்ளிக்கூடங்களிலே ஹரிஜன மாணவர்களுக்கு ஹரிஜன் வெல்பேர் டிபார்ட்மெண்டிலிருந்து ஜில்லா கலெக்டர் மத்தியான சாப்பாடு வசதி செய்கிறார்கள். சில இடங்களிலே, நண்பகல் உணவை அதோடு சேர்த்துப்போட்டு இந்த ஏழை மாணவர்களுக்கு சாப்பாடு போடும் திட்டத்தை சர்க்கார் வகுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is only a suggestion for action, Sir.